வாராய்!" என்று நின்று கொண்டே அறிவுகெடும். [அந்திப்போது என்று தொடங்கி] - அஸுரர்க்கு பலம்வர்த்திக்கும் ஸந்த்யாகாலத்திலே ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்காக ஹிரண்யனுடைய சரீரத்தைப் பிளந்தருளி ப்ரயோஜநாந்தரபரருமாய் அபிமாநிகளுமாய் பெருமிடுக்கருமான தேவர்களுக்காக நிரதிசயபோக்யமான வடிவோடே கடல்கடைந்தருளினாய்; இப்படிச்செய்வான் ஒருவனுமிருந்துவைத்து உன்திருவடிகளைச் சிந்தித்தோமாய் முடியவேணுமென்று துணிந்திருந்துள்ள இப்பெண்பிள்ளைக்கு உன்னைக்காட்டாதே இவளை மதிகெடுத்தவனே! "உன்னைக்கண்டு உன்னெதிரே முடியவேணும்" என்று ப்ராணன்களை தரித்திருக்கிறாள் என்றுமாம்.

இ.— அஞ்சாம்பாட்டில், இவளுக்கு ப்ரதிக்ஷணம் பேதித்து ஒன்றோடு ஒன்று சேராதே வருகிற அவஸ்தாபேதங்களை அறிவித்து இவளை இப்படிப்படுத்துகை உம்முடைய நீர்மைக்குப் போருமோ? என்கிறாள் [சிந்திக்கும்]-உம்முடைய ஸௌந்தர்யாதிகுணங்களையும் உம்மோட்டை ஸம்ச்லேஷத்தையும் நினைக்கும். முன்பு இவ்வநுஸந்தாநமின்றியே யாயிற்று இருப்பது. மோஹித்தவோபாதி இதுவும் ஒருபடிவிக்ருதி இருக்கிறபடி. அப்போதே காணப்பெறாமையாலே [திசைக்கும்] - மோஹிக்கும். [தேறும்] - ஒருஹேது வின்றிக்கேயிருக்கத் தேறாநின்றாள். இதுதானும் பயாவஹமாயிருக்கிறதாயிற்று. மோஹம் செல்லா நிற்க, அபேக்ஷிதம் பெற்றாரைப்போலே தேறுகை பயாவஹமிறே: சரமதசையில் பிறக்கும் தெளிவுக்கு அஞ்சவேணுமே: [கைகூப்பும்]-தேவர்படிகளைநினைத்து ஈடுபட்டுக் கும்பிடும். கீழே, "மயங்கும் கைகூப்பும்" என்றது, "இங்கு தேறும் கைகூப்பும்" என்றது : அல்லாதனஸஞ்சாரியாய்ச் செல்லாநிற்க, இதுஒன்றும் ஸ்த்திரமாய்ச் செல்லாநின்றது: ஸ்வரூபாநுபந்தியான தர்மமாகையாலே. "நித்யாஞ்சலிபுடா:" என்னக் கடவதிறே. ஆற்றாமையாலே, [திருவரங்கத்துள்ளாய் என்னும்] - நீர் உம்முடைய செல்லாமைதோற்றக் கிட்டிவைத்து, இவளுடைய அஞ்ஜலியை மறுக்கிறதென்? சேஷபூதனுக்கு அஞ்சலியோபாதியிறே சேஷி கிட்டவந்திருக்கையாகிறது. பெருமானே? என்னாநின்றாள். [வந்திக்கும்] - செயலறுதியாலே பெருமாள் எழுந்தருளி இருக்கிறபடியை நினைத்துத் தண்டனிடும். வந்திகளுடைய கார்யமாகையாலே, ஸ்தோத்ரம் பண்ணும் என்றுமாம். "இதொருதோளே! தோள்மாலையே! முறுவலே!" என்று அந்யரைப்போலே புகழாநின்றாள். [ஆங்கே மழைக்கண்ணீர்மல்க] - அத்தசையிலே கண்ணநீர்வெள்ளமிட, தண்டனிட்டுக் கிடக்கும் என்னுதல்; ஸ்தோத்ரம்பண்ணாநிற்கும் என்னுதல். [வந்திடாய்] - தன் ஆற்றாமைதோற்ற, பிரானே! வாராய் என்னும். [என்றென்றே] - ஒருகால் அழைத்தால் வாராதொழிந்தால் பின்னையும் அத்தையே சொல்லுமித்தனையல்லது, வேறு சிலதான சொல்லுமவளன்றே. அச்சொலவுதானே வெண்கலத்வநிபோலே ஓய்ந்து செல்லாநின்றது. [மயங்கும்] - அதுதானும்போய் அறிவுகெடாநின்றாள். "வந்திடாய்" என்றதுவும் இழக்கக்கிடாய் புகுகிறது: நினைத்தபோதாக வரப்போமோ? என்ன, [அந்திப் போது இத்யாதி]-ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே தூணிலேவந்து தோற்றிற்றிலையோ என்கிறாள்: அஸுரர் களுக்கு பலம்வர்த்திக்கும் காலத்திலே. அவனுடைய வரத்திற்புகாத காலத்திலே [அவுணனுடல்]-வரபலத் தாலே திருவுகிருக்கு ஊட்டியாகவளர்த்த ஹிரண்யனுடைய சரீரத்தைப் பிளந்தானே! "நரஸ்யார்த்த தநும் க்ருத்வா ஸிம்ஹஸ்யார்த்த தநும் ததா" என்று இரண்டுயோநியை ஒன்றாக்கி, அவன்வரத்திற்புகாத வடிவாலே பிளந்தவனே! "மத்தஸ்ஸர்வ மஹம்ஸர்வம்" என்னும்தெளிவுடையார்க்கோ உதவலாவது? மயங்கின இவளுக்கு உதவலாகாதோ? ஆணுமாய் மிடுக்கருமானவனுக்கோ உதவலாவது? அப் பருவத்தில் அபலைக்கு உதவலாகாதோ? பிறராய்வரும் கலிவோ பரிஹரிக்கலாவது? உன்னால்வந்தது பரிஹரிக்கலாகாதோ? இவளுக்கு உதவுமிடத்தில் காலநியதி வேண்டா, உன்னையழிய மாறவேண்டா. அவ்வளவேயோ? [அலைகடல் கடைந்த ஆரமுதே]-ப்ரயோஜநாந்தரபரருமாய் ஈச்வராபிமாநிகளுமானார்க்கு, நிரதிசயபோக்யமானவடிவைக்கொண்டு, க்லேசிதமான கடலைக்கடைந்தவனே! இவளுக்குக் கடல்கடைய வேணுமோ, கடல்கடைந்த வடிவைக்காட்ட அமையாதோ? ஒருப்ரணயிநியை லபிக்கைக்குப் பண்டு கடல் கடைந்தவனல்லையோ? [சந்தித்துன் சரணம்சார்வதே வலித்த இதையலை மையல்செய்தானே] - தெளிவுடைய சிறுக்கனுக்கு உன்னை அழியமாறி உதவினாய்; ப்ரயோஜநாந்தரபரர்க்கு உடம்புநோவக் கடல்கடைந்தாய்; உன்னையல்லது அறியாத இவளை அறிவுகெடுத்து வைத்தாய். உன்திருவடிகளைக்கிட்டி முடியவேணும் என்று துணிந்திருக்கிற இப்பெண்ணை என்னுதல். உன்னைக்கண்டு உன்னெதிரே முடியவேணும் என்று ப்ராணனை தரித்திருக்கிற இவளை என்னுதல். "சைஸ்ய மாதா நபிதா நசாந்ய:". மாகஸாநுபவமேயன்றி, உன்னைக்கிட்டி பாஹ்ய ஸம்ச்லேஷம் பண்ணினேனாகவேணும் என்று துணிந்திருக்கிற இவளை என்னுதல். [மையல் செய்தானே] - உன்னைக்காட்டாதே இவளை மதிகெடுத்தவனே!

௫.—அஞ்சாம்பாட்டு. இவளுக்கு ப்ரதிக்ஷணம் பேதித்து ஒன்றோடொன்று சேராதே வருகிற அவஸ்தாபேதங்களை அறிவித்து, இவளை இப்படி படுத்துகை உம்முடைய சீர்மைக்குப் போருமோ என்கிறாள்.

[சிந்திக்கும்] உம்முடைய ஸௌந்தர்யாதிகளையும் உம்மோட்டைக்கலவியையும் சிந்திக்கும். முன்பு இவ்வநுஸந்தாநமும் இன்றிக்கேயாயிற்றிருந்தது; மோஹாந்தோபாதி இதுவும் ஒரு விக்ருதியாயிருக்கிறபடி. [திசைக்கும்] அப்போதே காணப்பெறாமையாலே மோஹிக்கும். [தேறும்] ஒரு ஹேதுவின்றிக்கே யிருக்கத் தேறுகின்றாள். இதுதானும் பயாவஹமாயிருக்கிறதாயிற்று; மோஹம் செல்லாநிற்க, அபேக்ஷிதம்பெற்றாரைப்போலே தேறுகை பயாவஹமிறே. சரமதசையில் பிறக்கும் தெளிவுக்கும் அஞ்சவேணுமே. உய்ந்த பிள்ளை பாடும்போது. "கெட்டேன், இவள் 'தேறும்' என்பதே" என்று ஜீயருளிச்செய் வராம். [கைகூப்பும்] இதுஇவளுக்குப் ப்ரக்ருதி. கீழே "மயங்கும் கைகூப்பும்" என்றது; இங்கே தேறும் கைகூப்பும் என்றது; அல்லாதன ஸஞ்சாரியாய்ச் செல்லாநிற்க, இது ஒன்றும் ஸ்திரமாய்ச்செல்லாநிற்கும் ஸ்வரூபாநுபந்தியாகையாலே. *நித்யாஞ்ஜலிபுடா:* என்னக்கட வதிறே. மோஹத்திலும் உணர்த்தியிலும் ஸத்தையுண்டே; "வழுவிலா வடிமைசெய்யவேண்டு நாம்" என்றதிறே நிலைநின்ற ஸ்வரூபம். அநுவர்த்தமாநமானதிறே பரமார்த்தமாவது. [திரு வரங்கத்துள்ளாயென்னும்] "பெருமானேயென்னும்" என்று ஜீயர். அவ்வூரில் ஸம்பந்தங் கொண்டு போலேகாணும் அவரையும் விரும்பிற்று. [வந்திக்கும்] "திருவரங்கத்துள்ளாய்" என்றது நெஞ்சிலேவடிம்பிட்டு "ஒருமகமே, முநுவலே, ஒருவனையமே" என்று ஸ்தோத்ரம் பண்ணநின்றாளென்னுதல்; பக்நாபிமாநையாய்த் திருவடிகளிலே விழுந்து கிடக்குமென்னு தல். [ஆங்கே] அவ்வவஸ்தையிலே, [மழைக்கண்ணீர்த்துமி] குளிர்ந்தகண்ணீர் மல்க, வந்திடா யென்றென்று சொல்லி, அச்சொலவோடே யறிவுகெடும். நினைத்தபோதாக வரப்போமோ? என்ன, [அந்திப்போது] *மத்தஸ்ஸர்வ மஹம்ஸர்வம்* என்று தெளிந்திருப்பார்க்கோ உதவலா வது? அறிவுகெடுவார்க்கு உதவலாகாதோ? அவன் வரத்துக்கு விருத்தமாயிருப்பதொரு காலத் திலே, ஆஸுரப்ரக்ருதியாயிருக்கிற அவுணனுடைய சரீரத்தைப் பிளந்து பொகட்டிலையோ? தமப்பன் பகையானுலோ வுதவலாவது? நீர் பகையாறு உதவலாகாதோ? இவ்வளவில் உதவாமைக்கு மேற்படப் பகையில்லையிறே. அது ஒருகால் சிறுக்கனுக்கு உதவினமை யுண்டு. அது தப்பிற்றிறேயென்ன, பின்போ நீயுதவாதது? [அலைகடல்கடைந்த] ப்ரயோஜ நாந்தரபரர்க்கும் அகப்படக் கடலைக் கடைந்துகொடுத்திலையோ! உன்னைக்கொண்டு ஒரு ப்ரயோஜநங் கொள்வார்க்கோ உதவலாவது? உன்னையே ப்ரயோஜநம் என்றிருப்பார்க்கு உதவ லாகாதோ? [ஆரமுதே] இவருடைய அம்ருதத்தைக்கொண்டாயிற்று அவர்கள் கடல்கடைந் தது. [சந்தித்து இத்யாதி] உன்னைக்கிட்டித் திருவடிகளைச் சாரவேணுமென்று வ்யவஸிதை யாயிருக்கிற இவளை இப்படி யறிவுகெடுப்பதே! ([வலித்த] ப்ராணனை பலாத்காரத்தாலே தரித்த;) அன்றிக்கே உன்னைக்கிட்டி ஸந்நிதியிலே முடியுமித்தனையென்று ப்ராணனை தரித்திருக் கிறவளை என்னுதல். (வலித்த - அத்யவஸித்த.) *தாவத்யஹம் தூத ஜிஜீவிஷேயம்* என்று காணும் இருக்கிறது. [மையல் செய்தானே] உம்மை யாசைப்பட்டவளுக்கும் மயக்கமேபோ ப்பலித்துவிட்டது.

**மையல்செய்தென்னைமனங்கவர்ந்தானேயென்னும் மாமாயனே! என்னும்***
**செய்யவாய்மணியேயென்னும் தண்புனல்சூழ்திருவரங்கத்துள்ளா**
**யென்னும்***
**வெய்யவாள்தண்டுசங்குசக்கரம்வில்லேந்தும் விண்ணோர்முதலென்னும்***
**பைகொள்பாம்பணையாய்! இவள்திறத்தருளாய் பாவியேன்செயற்**
**பால்துவே. (6)**

௬.—ஆறும்பாட்டில், இவள் இவ்வவஸ்தாபந்நையாயிருக்க இவளார்த்தி தீர்த்தருளா தொழிகைக்குக் காரணம் என்னுடைய கர்மவிபாகம் என்கிறாள். [மையல் என்று தொடங்கி] - என்

பக்கலிலே அதிவ்யாமோஹத்தைப்பண்ணி என்னை அறிவழித்து என்மநஸ்ஸை நிச்சேஷமாகப் பறித்துக் கொண்டவனே! என்னும். ஸம்ச்லேஷதசையில் ஆச்சர்யமான சேஷ்டிதங்களை உடையவனே! என்னும். ஸம்ச்லேஷதசையில் வார்த்தை அருளிச்செய்யும்போது திருப்பவளத்திலும் திருவுடம்பிலும் பிறக்கும் அழகை நினைத்துச் செய்யவாய்மணியே! என்னாநிற்கும். ச்ரமஹரமான கோயிலில் கண்வளர்ந்தருளு கிறபடியை நினைத்து இவள் தனக்கு உதவுகிறிலை என்று சொல்லா நிற்கும். [வெய்யவாள் தண்டு சங்கு சக்கரம் வில் ஏந்தும் விண்ணோர்முதல்! என்றும்] - அயர்வறுமமரர்களுக்கு அதிபதியாய் இருந்து வைத்து ஆச்ரிதருடைய ஆபந்நிவாரணார்த்தமாகக் காணவே எதிரிகள் பயப்படும்படி கொடியவான திவ்யாயுதங்களை தரித்திருக்கிற நீ, என்னுடைய ப்ரதிபந்தகங்களை நீக்கி என்னோடே ஸம்ச்லேஷித் தருளாதொழிவதே என்று கருத்து. [பைகொள்பாம்பணையாய் இவள் திறத்தருளாய்] - ஆச்ரிதஸம்ச லேஷைக போகனுமிருக்கிற நீ, இவளிடையாட்டத்தில் க்ருபை பண்ணுகிறிலை. இவள் து:க்கிதையாய் இருக்கச்செய்தே இவளை விஷயீகரியாதே "படுக்கை நேர்பாடாயிருந்தது" என்று உறங்கியருளுவதே! என்றுமாம்.

இ.—ஆறும்பாட்டில், இவ்வவஸ்த்தாபந்நையாயிருக்கிற இவள் ஆர்த்தி தீர்த்தருளாதொழிகைக்குக் காரணம் என்கர்மவிபாகமேயிறே என்கிறாள். [மையல் இத்யாதி] - என்பக்கலிலே அதிவ்யாமோஹத்தைப் பண்ணி என்மநஸ்ஸை அபஹரித்தவனே! தன்மேன்மைபாராதே தாழநின்று பணிமொழிகளைச் சொல்லி இழிதொழில்களைச்செய்து தன் ஆற்றாமையை ஆவிஷ்கரித்து, ஸர்வேச்வரத்வ கந்தமான மநஸ்ஸை அபஹரித்தவனே! என்னும். தங்கள் இழவு தெரியாதபடியிருந்து பிறர்நெஞ்சை அபஹரிக்கையிறே ஸ்த்ரீத்வமர்யாதை; என் நினைவு அவன்நினைவாய் அத்தலை இத்தலையாயிற்று என்கிறாள். [மாமாயனே என்னும்] - ஸம்ச்லேஷதசையில் ஆச்சர்யமான சேஷ்டிதங்களை உடையவனே! என்னும். [செய்யவாய் மணியே என்னும்] - இதுவும் அந்தமாயங்களிலே ஒன்று. தாழ்வுதோற்ற வார்த்தைசொல்லத் தொடங்கி, அது தலைக்கட்டமாட்டாதே ஸ்மிதம் பண்ணாநிற்கும்போதைத் திருவதரத்திற்பழுப்பு, "செவ்வாய்முறுவலோடு எனது உள்ளத்திருந்த அவ்வாயன்றியானறியேன்" என்னும் படியிறே முறுவல் துவக்கவல்லபடி. [மணியே] - ஸ்மிதம்பண்ணும்போது திருமேனியெங்குமொக்கப் பிறக்கும் எழிலும் குளிர்த்தியுமிருந்தபடி. [தண்புனல்சூழ் திருவரங்கத்துள்ளாய் என்னும்] - குளிர்த்திக்கு இவ்வடிவழகு தேடிப்போகவேண்டாதபடி தேசமே ச்ரமஹரமாய் இருக்கிறபடி. ஸந்நிஹிதனாய்வைத்து எனக்கு உதவாதொழிவதே; [வெய்யவாள் இத்யாதி] - அயர்வறுமமரர்கள்அதிபதியாய்வைத்து ஆர்த்தரக்ஷணார்த்தமாக அன்றோ திவ்யாயுதங்களை தரித்தது? காணவே, எதிரி மண்ணுண்ணும்படியான திவ்யாயுதங்களை தரித்திருக்கிற நீ, என்விரோதிகளைப்போக்கி முகங்காட்டாதொழிவதே என்கை. [பைகொள்பாம்பணையாய் இவள்திறத்து அருளாய்] - ஆச்ரிதஸம்ச்லேஷ ஸ்வபாவனான நீ இவள்திறத்து க்ருபைபண்ணுகிறிலை. ஸ்வஸ்பர்சத்தாலே விகஸிதமான ப்பணத்தைஉடையனாய், ஜாதிப்ரயுக்தமான மென்மை குளிர்த்தி நாற்றங்களையுடைய திருவனந்தாழ்வானைப் படுக்கையாகஉடையனாகை. நீரும் இவனுமாக இருக்கக்கடவபடுக்கை, இவள் தறைக்கிடை கிடக்க உமக்குப் பொருந்துவதே! [இவள் திறத்து] - பாடோடிக்கிடக்கிற இவள்திறத்து. [அருளாய்] - அருள்கொள்வார் தேட்டமானநீ, அருள்பெறில் ஜீவிக்குமவளை இப்படி தறைக்கிடைகிடக்க விட்டு வைப்பதே; [பாவியேன்செயற்பாலதுவே] - பாவியேன் செயலடத்தது. இவள்பக்கலிலும் குறையில்லை, உம்முடைய பக்கலிலும் குறையில்லை. இருவருமானசேர்த்திபெற இருக்கிற என்பாபமிறே இதுக்கு ஹேது. 'மத்பாப மேவாத்ர நிமித்தமாஸீத்''.

ஈடு.—ஆறும்பாட்டு, இவள் இவ்வளவு ஆபந்நையாயிருக்க, இவளார்த்தி தீர்த்து அருளாதொழிகைக்குக் காரணம் என்னுடைய கர்மவிபாகமென்கிறாள்.

[மையல்செய்து] உணர்த்தியுண்டாகில் நெஞ்சிறுவாள் காணும். எதிரிகளுடைய அரவதாரம் பார்த்திருந்து அவர்கள்கோட்டை கொள்ளுவாரைப்போலே. [என்னை] கடலைத் தறைகண்டா னென்னுமாப்போலே. [மனங்கவர்ந்தானே] புழுகூற்றிச்சட்டம் போகடுவாரைப் போலே. [மையலித்யாதி] கொன்று பிறிச்சீரையறுப்பாரைப்போலே. [மாமாயனே யென்னும்] மையல்செய்த ப்ரகாரங்கள். கலக்கிற ஸமயத்தில் தாழநின்று கையைக்காலைப்பிடித்துப் பரிமாறின பரிமாற்றங்காணும் இவள்நெஞ்சில் பட்டுக்கிடக்கின்றது. ஸ்வதஸ்ஸித்தமான மேன்மை போலல்லவாயிற்று ப்ரணயித்வத்தாலே தாழநின்றநிலை. ஸம்ச்லேஷ தசையில்

ஆச்சர்யமான சேஷ்டிதங்களை யுடையவனே! என்னும். [செய்யவாய்மணியே யென்னும்] இதுவும் அந்தமாயங்களிலே யொன்று. தைர்யபங்கம் பிறந்து "நான் உன் சரக்கன்றோ?" என்று சொல்லுகிறபோதை அதரத்தில் பழுப்பு *ஸவிலாஸஸ்மிததாரம்* என்னக்கடவதிறே. [மணியே] ஸ்மிதம் பண்ணுகிற புஷ்பம் விகஸிதமாம்போது எங்குமொக்க ஒரு செவ்வி பிறக்குமாப்போலே, ஸ்மிதம் பண்ணுகிறபோது வடிவிலே எங்குமொக்க ஒரு செவ்வி பிறந்தபடி. [தண்புனல்] ஸ்மிதத்தில் குளிர்த்தி போலேகாணும் இவ்வாயில் குளிர்த்தி. அவ்வாயில் குளிர்த்திபோலாயிற்று ஊரில் குளிர்த்தியும். (வாய்-இடம்) [வெய்யவாளித்யாதி] இவ்வாயுதங்கள் எதிரிகளை யழிக்கைக்கு உடலாயிருக்குமாப்போலே காமிகளை யழிக்கைக்கும் உடலாயிருக்குமிறே. உகப்பாரையும் உகவாதாரையும் ஒக்கத் தோற்பிக்குமவை. முன்னே கைகண்டுவைத்தோமையிறே. காணவே எதிரிகள் மண்ணுண்ணும்படியான திவ்யாயுதங்களை தரித்திருக்கிற நீ என் விரோதிகளைப் போக்கி முகங் காட்டாதொழிவதே. [விண்ணோர்முதலென்னும்] இவ்வாயுதங்களோட்டைச் சேர்த்தியால் வந்த அழகைக்காட்டி நடத்த, அதுவே ஜீவனமாகவாயிற்று அங்குள்ளார் கிடப்பது. இவ்வாயுதமில் [பைகொளித்யாதி] ஸ்மிதத்தோடு, அங்கே விகாரமுண்டாய் தரித்துக்கொண்டிருக்கிறானன்றே. திருவநந்தாழ்வான் மேலே திவ்யாயுதங்களோடு, நித்யவிபூதியுக்தனாயிருக்கிற இருப்போடு வாசியற எல்லாம் உத்தேச்யமாயிருக்கிறதாயிற்று. பகவத்விக்ரஹஸ்பர்சத்தாலே உண்டான ஹர்ஷத்தாலே விகஸிதமான பணங்களையுடையனான திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடையவனே! தனிப்படுக்கையிலே சாய்வதே நீர், இவள் தரைக்கிடைகிடக்க. [இவள் திறத்தருளாய்] படுக்கையில் சேர்த்திபெறுவிட்டால், நாட்டுக்குப்பண்ணும் அருளு மின்றிக்கே யொழியவேணுமோ? [இவள்திறத்து] பாடோடிக்கிடக்கிற இவள்திறத்து, [அருளாய்] அருள்கொள்வார் தேட்டமான நீ, அருள்பெறில் ஜீவிக்குமிவளை இப்படி தரைக் கிடைகிடக்க விட்டுவைப்பதே! (அருளாய் - அருளுகிறிலையென்றபடி.) [பாவியேன்] நீ அருளாதவனாயல்லை; இவள் அது பெறுவிடில் ஜீவிப்பாளாயல்லை; இதுக்கடி நான் பண்ணின பாபமிறே. *மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத்* என்னுமாப்போலே, [செயற்பாலது] என்னுடைய செயவிடத்தது அருளாமைக்கு அடி; (பாவியேன் செயவிடத்தது - இவள் பக்கலிலும் குறையில்லை, உம்முடைய பக்கலிலும் குறையில்லை, இருவருமான சேர்த்திபெறவிருக்கிற என்பாபமிறே இதுக்கு ஹேது.)

**பாலதுன்பங்களின்பங்கள் படைத்தாய்! பற்றிலார்பற்றநின்றானே!***
**காலசக்கரத்தாய்! கடலிடங்கொண்டகடல்வண்ணா! கண்ணனே! என்னும்***
**சேல்கொள்தண்புனல்சூழ்திருவரங்கத்தாயென்னும் என்தீர்த்தனே!என்னும்***
**கோலமாமழைக்கண்பனிமல்கஇருக்கும் என்னுடைக்கோமளக்**
**கொழுந்தே. (7)**

ஈ.—ஏழாம்பாட்டில், அவ்வவபதார்த்தங்களை அநுஸந்தித்து அவைபொறுக்குமளவுகளிலே யன்றோ ஸுகதுக்கங்களைச் சுமத்துவது; இப்படி என்னைப்படுத்தலாமோ? என்னுகின்றாள் என்கிறாள். ஆச்ரிதரைவாழ்விக்கையும் அநாச்ரிதரை துக்கப்படுத்துகையுமன்றிக்கே மற்றைப்படியே ஆயிற்றே உம்முடையபடி? என்னுகின்றாள் என்றுமாம். [பாலவென்றுதொடங்கி] - இடமறிந்து ஸுகதுக்கங்களைப் படைத்தவனே! [பற்றிலார்பற்றநின்றானே] - தந்தாமுக்கே சிலநன்மை இல்லாதாரை விஷயீகரிக்கக்கடவதோ? என்னில், அசரணராய்த் தங்களுக்கு ஒருபற்றும்இன்றிக்கே இருக்கிற ஜனந்தன் வேல்வார்க்கும் ஆச்ரயிக்கலாம்படியான நீர்மையையுடையவன் அல்லையோ? [காலசக்கரத்தாய்]-காலத்தை நடத்தும் திருவாழியை உடையவனே! விஷயீகரிக்கக்காலமாக வேணுமோ? என்னில்; காலத்தை வாழும் நீ இப்படி வழக்கன்றோ? என்றுமாம். [கடலென்று தொடங்கி] - ஒருகடல் ஒருகடலிலே சாய்ந்தாற்போலே ஆச்ரிதருக்காகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளி அங்குவரமாட்டாதார்க்கும் ஆச்ரயணீயனாய்க் கொண்டு ஸ்ரீநந்தகோபர்திருமகனாய் வந்து திருவவதாரம் பண்ணியருளி அங்கு உதவாதார்க்கும் இழக்கவேண்டாதபடி, மத்ஸ்யாதிகளும் அப்படத் தந்தாமுடைய தாரகங்களை

இழவாதே புழிக்கலாம்படியான கோயிலிலேவந்து நித்யஸந்நிஹிதனும் இருக்கிறும் அல்லேயோ? என்றும். [என்றீர்த்தனேஎன்னும்] - உன்னுடைய போக்யதாதிசயத்தினாலே உன்னுவில்லது செல்லாதபடி என்னைப்பண்ணினவனே! என்றும். நான் இழிந்தாடும்துறையே என்றுமாம். [கோலமாமழைக்கண் பனிமல்க இருக்கும] - அழகியதாய்ப் பெருத்து ச்ரமஹரமான கண் நீர்மல்க இராநின்ருள். இவ்வழகு போக்தாவானவன் புழிக்கப்பெறுகையாலே காட்டில்எறித்த நிலாவாகா நின்றது என்று திருத்தாயார்க்குக்கருத்து. [என்றுடைக் கோமளக்கொழுந்தே] - விச்லேஷதுஃக்கம் அநுபவிக்கைக்குப் பாத்தமில்லாதபடி மிகவும்பாலையான என்மகள்.

இ.—ஏழாம்பாட்டில், ஆச்ரயங்களை அநுஸந்தித்து, பொறுக்குமளவிலேயன்ருே துஃக்கங்களைச் சுமத்துவது? இப்படி என்னைப்படுத்தலாமோ! என்ருகின்ருள் என்கிறள். ஆச்ரிதரை வாழ்விக்கையும் அநாச்ரிதரை நலிகையுமன்றிக்கே, இப்போது விபரீதமாயிற்ருே உம்முடையபடி? என்ருநின்ருள் என்றுமாம். இக்கோமளக்கொழுந்துக்கு, கைம்முதல் ஒன்றும் இல்லாதார்பற்றினுல் ரக்ஷிக்கும் நீர்மையையுடையவன் ஸந்நிதியிலே இதெல்லாம்படவேண்டுகிறது என்னேட்டை ஸம்பந்தம் என்று மநோரதிக்கிறள். [பாவ துன்பம்இத்யாதி] - இடமறிந்து ஸுகதுஃக்கங்களைப் படைத்தவனே! பாலவாக - ஸ்த்தாநேஸ்த்தாநே ஆக, பிரிந்தார்எல்லாரும் அநுபவிக்கும்இத்தை இவள்ஒருத்தியையும் அநுபவிப்பிக்கப்பார்த்தால் இவளால் பொறுக்கப்போமோ? அங்ஙனன்றிக்கே, ஆச்ரிதர்வாழவும் அநாச்ரிதர் கெடும்படியாகவும் அன்ருே பண்ணிவைத்தது. தீமைபுன்னடியார்க்குத் தீர்த்து அசுரர்க்குத் தீமைகள் செய்யுமவனன்ருே? பண்டு கட்டின மர்யாதையும் இல்லையோஇவளுக்கு? அபராதங்கள் கனத்துத் தந்தாமுக்கென்ன ஒரு கைம்முதல் இல்லாதாரை விஷயீகரிக்கக்கடவதோ என்னில்; [பற்றிலார்பற்றநின்ருனே] - அபராதமேயாய் ஸுக்ருத லேசமும் இல்லாத ஜயந்தன்போல்வார்க்கும் ஆச்ரயிக்கலாம் படியன்ருே உம்முடைய நீர்மை? "ஸ பித்ராச பரித்யக்த:". [காலசக்கரத்தாய்] - விஷயீகரிக்கக் காலமாகவேணுமே என்ன. காலதத்வம் நீ இட்ட வழக்கன்ருே? ஆச்ரிதர்க்காகப் பகலை இரவாக்கினவன் அன்ருே! அங்ஙனன்றிக்கே, ப்ரதிபந்தகமுண்டு காணும் என்ன: ப்ரதிபக்ஷத்துக்கு ம்ருத்யுவானதிருவாழி கையிலேயிருக்க ப்ரதிபந்தகமுண்டோ? நாம் அஸந்நிஹிதர் அன்ருே? என்ன, [கடலிடங்கொண்ட கடல்வண்ணு] - நீ எங்களைக் காலம்பார்த்தன்ருே கிடக்கிறது? ஒருகடல் ஒருகடலிலே சாய்ந்தாற்போலே, அணித்தாகத் திருப்பாற்கடலிலே சாய்ந்திலையோ? அவ்வளவு வரவல்லார்க்கே யென்ன, [கண்ணனே என்னும்] - அசக்தரான இடையர்க்கும் இடைச்சிகளுக்கும் க்ருஷ்ணனுய்வந்து உதவிற்றிலையோ? "நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம்புரீம்". அதுதப்பிற்றிரே என்ன, [சேல்கொள்இத்யாதி] - மத்ஸ்யாதிகளுக்கும் தந்தாமுடைய தாரகாதிகள் இழவாதபடியான கோயிலிலே நித்யஸந்நிஹிதன் அல்லையோ? என்னும் உம்மாலல்லது தரிக்கமாட்டாத இவள் இப்படிபடக்கடவளோ?" "ஜலாந்மத்ஸ்யா விவோத்ருதௌ" என்றிருக்குமவளிறே இவள். [என்தீர்த்தனேஎன்னும்] - புறம்புள்ளாரோடு பொருந்தாதபடியாக்கின சுத்தியோகத்தைச் சொல்லுதல், உன்னைச்சொல்லிக் கூப்பிடும்படி பண்ணினவன் என்னுதல். தண்புனல் என்று-புனல் ப்ரஸ்துதமாகையாலே, நான் இழிந்தாடும்துறை என்னுதல். [கோலமாமழைக் கண்பனிமல்கவிருக்கும்] - தர்சநீயமாய்ப்பரந்து ச்ரமஹரமான கண்ணீர்மல்கவிராநின்ருள். கண்ணும் கண்ணநீருமாயிருக்கிற இவ்வழகுக்கு போக்தாவாயிருக்கிறவன் க்ருஷிபண்ணி, ப்பலவேளையிலே எனக்கு இரையாக்குவதே. [என்னுடைக்கோமளக் கொழுந்தே] - ஸம்ச்லேஷமும் பெருத இவளுக்கு விச்லேஷத்தை விளைப்பதே. [கொழுந்தே] - உபக்ரம் தேட்டமானவள்ளவிலே தரையிலேபடரவிடுவதே! "பதிஸம்யோக ஸுலபம்வய:". இப்பாட்டில், ஒருதலைக்கட்டின்றிக்கேயிருக்குமதுக்குக் கருத்து - "பரிஹரிக்கும் எல்லைகழிந்தாள். நாம் இவர்க்குச் சொல்லுவதென்?" என்று தன்னிலே நோவுபடுகிருள்" என்று வங்கிப்புரத்துநம்பி பணிக்கும்

ஈடு.—ஏழாம்பாட்டு. ஆச்ரயங்களை யநுஸந்தித்து, பொறுக்குமளவுகளிலே யன்ருே ஸுகதுஃக்கங்களைச்சுமத்துவது? இப்படி என்னைப்படுத்தலாமோ என்ருநின்ருளென்கிருள். "ஆச்ரிதரைவாழ்விக்கையும் அநாச்ரிதரை நலிகையுமன்றிக்கே, இப்போது விபரீதமாயிற்ருே உம்முடையபடி என்கிருள்" என்று பிள்ளான். இக்கோமளக் கொழுந்துக்கு, கைம்முத லொன்றுமில்லாதார் பற்றினுல் ரக்ஷிக்கக்கடவ நீர்மையுடையவன்ஸந்நிதியிலே இதெல்லாம் படவேண்டுகிறது, என்னேட்டை ஸம்பந்தமென்று மநோரதிக்கிருன்.

[பால இத்யாதி] இடமறிந்து ஸுகது:க்கங்களைப் படைத்தவனே! பாலென்றது இடமென்றபடி; அப்பாலிப்பாலென்றால்-அவ்விடமிவ் விடமென்றபடி. பாலனாக - ஸ்த்தாநேஸ்த்தாநேயாக. உம்மைப்பிரிந்தார் எல்லாரும் அநுபவிக்கும் து:க்கத்தை இவளொருத்தியை அநுபவிக்கப்பிப்பார்த்தால் இவளால் பொறுக்கப்போமோ? அங்ஙனன்றிக்கே, ஆச்ரிதர்வாழவும் அநாச்ரிதர் கெடும்படியாகவுமன்றோ நீ பண்ணிவைத்தது? பாலென்பது - முறை. "செய்குந்தா வருந்தீமை யுன்னடியார்க்குத்தீர்த்து அசுரர்க்குத் தீமைகள் செய்குந்தனன்றோ. பண்டு கட்டின மர்யாதையும் இவளுக்கில்லையோ? பாலென்று - பாகமும், இயல்வும், இடமும், ந்யாயமும், இவை நாலுக்கும் பேர். தந்தாமால் பொறுக்கவொண்ணாதவை தாந்தாமே ஏறிட்டுக்கொள்ளும்போது நம்மால் செய்யலாவதுண்டோ? நம்பக்கல் குறையில்லை. பேறு தந்தாமதானால் தாங்களும் சிலசெய்யவேணுமென்று அவனுக்குக்கருத்தாக, [பற்றிலார்பற்றநின்றானே] ஒருகைம்முதலில்லாதார்க்காகவன்றோ இங்குவந்து சாய்ந்தருளிற்று? இக்கிடை நித்யஸூரிகளுக்காகவோ? உம்முடையபக்கல் பற்றறுத்துக்கொண்ட ஜயந்தன் போல்வார்க்கும் பற்றாயிருக்குமவரன்றோ நீர்! *தமேவ சரணங்கத:* அன்றோ? அது உண்டானாலும் அதுக்கொருகால முண்டே என்ன, [காலசக்கரத்தாய்] அக்காலசக்ரகம் நீயிட்ட வழக்கன்றோ? ஆச்ரிதர்க்காகப் பகலையிரவாக்கினவனன்றோ? அன்றிக்கே, ப்ரதிபந்தகமுண்டே யென்னில்; ப்ரதிபந்தகத்துக்கு ம்ருத்யுவான திருவாழியன்றோ தரித்திருக்கிறது. பரிகாரமுண்டானாலும் நான் அஸ்த்தனன்றோ என்னவொண்ணாதே! [கடலிடங்கொண்ட கடல்வண்ணா] நீ எங்களைக் காலம்பார்த்தன்றோ கிடக்கிறது. ஒருகடல் ஒருகடலிலே சாய்ந்தாற்போலே அணித்தாகத் திருப்பாற்கடலிலே சாய்ந்திலையோ? ஆனால் அங்கே வரலாகாதோ என்ன; அவ்வளவிலே கேட்கமாட்டாத இடையர்க்கும் இடைச்சிகளுக்குமாக க்ருஷ்ணனாய்வந்து உதவிற்றிலையோ? என்கிறாள். [கண்ணனேயென்னும்] *நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம்புரீம்* என்று அக்கிடையைவிட்டு இடையிலேவந்து உதவிற்றிலையோ? அது தப்பிற்றிறே என்ன, அவ்வவதாரம் பரத்வமென்னும்படியன்றோ; கோயிலிலேவந்து சாய்ந்தருளிற்று? [செல்கொளித்யாதி] *ஜலாந்மத்ஸ்யாவிவ* அன்றோ; ஜலசரஸத்த்வங்கள் ஜலத்தைப்பிரிந்து தரிக்கிலன்றோ இவள் உம்மைப் பிரிந்து தரிக்கவல்லளாவது? அவ்வூரிலே வர்த்திக்கிற உமக்குப்போருமோ இவளுக்கு முகங்காட்டாதொழிகிறவிடம். [என் தீர்த்தனேயென்னும்] நீஉபேக்ஷித்தாலும் உன்னை யொழிய எனக்குச்செல்லாதபடி பண்ணினவனே! என்னுதல்; (புறம்புள்ளாரோடு பொருந்தாதபடியான சுத்தியோகத்தைச் சொல்லுதல்;) நான் இழிந்தாடும் துறையென்னுதல். [கோலமித்யாதி] தர்சநீயமாய்ப்பரந்து ச்ரமஹரமான கண் நீர்மல்க இரங்கின்றாள். கண்ணுங் கண்ணநீருமான அழகு காட்டிலெறித்த நிலாவாவதே! இக்கண்ணநீருக்கு ஸாதநாநுஷ்ட்டாநத்தைப்பண்ணி ப்பலவேளையிலே யிழப்பதே! [என்னுடைக் கோமளக்கொழுந்தே] கலக்கப்பொருதமார்த்தவத்தையுடையவன்பிரியப்பொறுக்குமோ? "தசை முறுகினால் வைத்யர்கள் முகம்பாராதாப்போலே, மகளவஸ்த்தையைக்கண்டு தளர்ந்து பெரியபெருமான்முகம்பாராதே வார்த்தை சொல்லுகிறாள்" என்றருளிச்செய்வர். [கொழுந்து] உபக்ரம தேட்டமானவளவிலே தறையிலேபடர விடுவதே. *பதிஸம்யோகஸுலபம் வய:*. இப்பாட்டிலொரு தலைக்கட்டின்றிக்கேயிருக்குமிதுக்குக்கருத்து-பரிஹரிக்க மெல்லிகழிந்தாள், நாம் இவர்க்குச் சொல்லுவதென்? என்று தன்னிலே நோவுபடுகிறாள்" என்று வங்கிப்புரத்து நம்பி பணிக்கும்.

**கொழுந்துவானவர்கட்கென்னும் குன்றேந்திக்கோநிரைகாத்தவன்!என்னும்***
**அழுந்தொழும்ஆவியனலவெவ்வுயிர்க்கும் அஞ்சனவண்ணனே!என்னும்***
**எழுந்துமேல்நோக்கியிமைப்பிலளிருக்கும் எங்ஙனேநோக்குகேன்?என்னும்***
**செழுந்தடம்புனல்சூழ்திருவரங்கத்தாய்! என்செய்கேன்என்திருமகட்கே. (8)**

ஒ—எட்டாம்பாட்டில், இவளுக்கு மேன்மேலன வருகிற நோவுகள் தீர்க்கைக்கு நான் செய்வதென்? என்கிறாள். [கொழுந்தென்று தொடங்கி] - அயர்வறுமமரர்களுக்கு அதிபதியாயிருந்து வைத்து க்ருஷ்ணனாய் வந்து திருவவதாரம்பண்ணியருளி கோவர்த்தநோத்தரணம் பண்ணி பசுநிரை

மேய்த்தவன்கிமர் என்னுடைய ஆர்த்தி போக்காதொழிகிருன் என்று சொல்ல உபக்ரமித்து நடுவே
இனைத்துப் பின்னையும் வார்த்தை ஒருபடி தலைக்கட்டும். இப்படி எல்லார்க்கும் ரக்ஷகனுயிருக்கிற இவன்
தன்னாலல்லது செல்லாத என்னுடைய ஆர்த்தியைத்தீர்த்திலன் என்று தன்இன்னுப்பாலே அழும்.
சருதோபநிஷத்கரைப் போலே தன்னுடையபேக்ஷிதலபித்த்யர்த்தமாகத்தொழுவதும் செய்யும். தொழுத
விடத்திலும் நீர்வரக்காணுமையாலே ஆத்மதத்த்வமெல்லாம் நெருப்பாம்படி நெடுமூச்செறியும்.
என்னுடைய விரஹாக்நி அவியலாம்படி உன்னுடைய ச்ரமஹரமான நிறத்தோடே வந்து தோற்ற
வல்லையே என்னும். தன்னுடைய ஆர்த்தத்வநிவ்ருத்தியே வருகிருய் என்று அத்யவஸித்து
உன்னுடைய ஸர்வபரிஷ்வங்கமும் காணலாம்படி எழுந்து மேலே பார்த்து இமைகொட்டாதே இருக்கும்;
பின்னையும் தோற்றுதொழிந்தவாறே உன்னை நான் காணும் விரகென்? என்னும். [செழுந்தட
மென்று தொடங்கி] - அழகிய மிக்க நீர்சூழ்ந்து இருந்துள்ள கோயிலை இடமாக உடையவனே! லக்ஷ்மீ
ஸமையான ; என்னுடைய மகள், அந்த ச்ரமஹரமான தேசத்திலேவந்து தரிக்கைக்கு நான் என்
செய்வேன்?

இ.—எட்டாம்பாட்டில், இவளுக்கு மேன்மேலும் வருகிறநோவுகள் தீர்க்கைக்கு நான் செய்வ
தென்? என்கிருள். [கொழுந்துவானவர்கட்கென்னும்] - அயர்வறுமமரர்களுக்குத் தலைஎன்னும்.
[குன்றேந்திக்கோநிரைகாத்தவன் என்னும்] - அம்மேன்மைபாராதே க்ருஷ்ணனுய் வந்து அவதரித்து,
இடையர்க்கும் பசுக்களுக்கும் நலிவு வாராமல் மலையைஎடுத்து நோக்கினவன் என்னும். நித்யஸூரிகள்
பரிய இருக்கிறவன்கிமர் பசுக்களுக்கும் இடையர்க்கும்தான் பரிவன் ஆகிருன். நித்யஸூரிகள்
தான் கொழுந்தாய் ஆயிற்று இருப்பது. நித்யஸூரிகள்ப்ரேமம் இவளுக்கு உண்டாகையாலும் இழக்க
வேண்டா; பசுக்களுடைய வெறுமை உண்டாகையாலும் இழக்கவேண்டா. குன்றெடுத்து என்னுதே,
ஏந்திஎன்றது - ஆச்ரிதார்த்தமான ப்ரவ்ருத்தி யாகையாலே அநாயாஸமாய் இருக்கையாலே. [அழும்] -
வரையாதே ரக்ஷிக்குமவனுடைய ரக்ஷணத்துக்குப் புறம்பாவதே! என்று அழும். பாலர்செய்வதும்
செய்யும் என்னுதல், ஸ்நேஹிகள் செய்யுமதுஞ்செய்யும் என்னுதல். [தொழும்] - புகலற்றர் செய்வதும்
செய்யும் என்னுதல். வேதாந்த ஜ்ஞாநமுடையார் செய்வதும் செய்யும் என்னுதல். [ஆவியனலவெவ்
வுயிர்க்கும்] - தொழுதவிடத்திலும் முகங்காட்டக் காணுமையாலே, அதாஹ்யமான ஆத்மவஸ்து
அக்நிமயமாம்படி நெடுமூச்செறியாநின்றுள். [அஞ்சனவண்ணனே என்னும்] - விரஹாக்நியை அவிக்
கலாம்படி ச்ரமஹரமான நிறத்தோடேவந்து தோற்றவல்லையே என்னும். [எழுந்து மேனோக்கி] - வடிவை
நினைத்தவாறே தரித்து எழுந்திருந்து, "ஆனைக்கு உதவினப்போலே வரக்கூடும்" என்று மேல் நோக்கிப்
பார்த்து, "ப்ரதமபரிஷ்வங்கமே தொடங்கிக் காணவேணும்" என்று இமைகொட்டாதே இருக்கும்.
[எங்ஙனே நோக்குகேன் என்னும்] - பின்னையும் தோற்றுதொழிந்தவாறே, நான் உன்னைக்காணும்
விரகென்? என்னும். [செழுந்தடம்புனல் சூழ் திருவரங்கத்தாய்] - அழகியதாய்ப்பெருத்த நீர்சூழ்ந்த
கோயிலை இடமாக உடையவனே! ச்ரமஹரமான தேசத்தை உடையீரான நீர் இத்தசைக்குப் போக்கடி
சொல்லீர். [என் செய்கேன்] - இப்படி அலமாக்கிறஇவள் உம்மைப்பெற்று ஆளாகைக்கு நான் செய்வது
என்? ச்ரமஹரமான அந்த தேசத்திலேவந்து இவள் தரிக்கைக்கு நான் செய்வது என்? உம்மால் அல்லது
செல்லாமைக்குப் பிராட்டிஅளவல்லள். [என்திருமகட்கே] - அவள் உம்மை ஆசைப்பட்டிருக்கும்; இவள்
உம்மையும் அவளையும்சேர ஆசைப்பட்டிருக்கும்.

ஈடு.—எட்டாம்பாட்டு. இவளுக்கு மேன்மேலன வருகிறநோவுகள் தீர்க்கைக்கு நான்
செய்வதென்? என்கிருள்.

[கொழுந்துவானவர்கட்கென்னும்] நித்யஸூரிகளுக்கும் தலையானவனே! என்னும்.
அன்றியே, அவர்கள் வேராகத் தான் கொழுந்தானவன் என்னுதல். (அவர்களாலே
லப்தஸத்தாகனுகை.) [குன்றேந்தி] லோகாந்தரத்தில் பரிமாற்றங்தேட வேணுமோ?
பசுக்களுக்கும் தத்ப்ராயரான இடையர்க்கும் உதவினவன்றோ? மேன்மையில்லாமை
யிழக்கிறேனே, நீர்மையில்லாமை யிழக்கிறேனே என்னும். [அழும்] மலையை தரித்து
ஒருவர்ஷத்தைப் பரிஹரித்த நீர் இவ்வர்ஷத்தைப் பரிஹரித்தாலாகாதோ? *பஹுதாஸக்
ததது:க்கவர்ஷிணி* என்கிற இது பரிஹரித்தாலாகாதோ? [அழும்] பாலர் செய்வதையும் செய்யும்

என்னுதல்; ஸ்நேஹிகள் செய்வதையும் செய்யுமென்னுதல் [தொழும்] - புகலற்றார் செய்வதைச் செய்யுமென்னுதல்; வேதாந்தஜ்ஞாநமுடையார் செய்வதைச் செய்யுமென்னுதல், [ஆவியனலவெவ்வுயிர்க்கும்] தொழுதவநந்தரம் வரக்காணாமையாலே, 'ப்ரஹ்மாஸ்த்ரம்வாய் மடுத்தது' என்று, அதாத்மபமான ஆத்மவஸ்து அக்மேயமாம்படி நெடுமூச்செறியும்; *தீர்க்கமுஷ்ணஞ்ச நிச்வஸ்ய* என்றபடியே. [அஞ்சனவண்ணனேயென்னும்] நெருப்பிலே நீரைச் சொரிந்தாப்போலே அக்குளிர்ந்த வடிவைக் கொண்டு வந்து தோற்றவல்லையேயென்னும் *மேகச்யாமம்* என்னும் வடிவிறே. கைகேயி வார்த்தையால் பிறந்ததாபமடைய ஆறுங்கிடீர் அவ்வடிவழகிலே விழிக்கப்பெற்றோமாகில் என்றார்களிறே. [எழுந்து இருபாது] வடிவை நினைத்தவாறே தரித்தெழுந்திருந்து, வரஸம்பாவனையுள்ள திக்கைப்பார்த்து, ''ப்ரதமபரிஸ்பந்தமே தொடங்கிக் காணவேணும்'' என்று இமைகொட்டாதே பார்த்துக்கொண்டிருக்கும். [எங்ஙனே நோக்குகேனென்னும்] தான் பார்த்த திக்கில் வரக்காணாமையாலே ''பின்னோக்கி வந்து கட்டிக்கொள்ளும்'' என்று புரிந்துபாராநிற்கும். [எழுந்து மேல்நோக்கி] வடிவை நினைத்தவாறே தளர்த்தியிலே எழுந்திருந்து, ''ஆனைக்கு உதவினாப்போலே வரக்கூடும்'' என்று மேல் நோக்கிப்பார்த்து, 'ப்ரதமபரிஸ்பந்தமே தொடங்கிக் காணவேணும்' என்று இமைகொட்டாதேயிருக்கும்; [எங்ஙனே நோக்குகேனென்னும்] பின்னையும் தோற்றக்காணாமையாலே, நான் உன்னைக்காணும்விரகு எது? என்னும். [செழுந்தடம் புனல்சூழ் திருவரங்கத்தாய்] அழகிதாய்ப் பெருத்த நீர்சூழ்ந்த கோயிலை இடமாகவுடையவனே! இப்படி ச்ரமஹரமான தேசத்திலே நீர் வந்து சாய்ந்தது இவள்வரவு பார்த்தன்றோ? அத்தலை இத்தலையாயிற்றோ? [என் செய்கேன்] கர்த்தவ்ய மடங்கலும் தானே யநுஷ்டித்தாள் நான் இனிச்செய்வதென்? உபாயாந்தரஸாத்யமோ உம்முடைய தர்சநம்? [என் திருமகட்கே] இவளை இழக்கலாமோ உமக்கு? உம்மை ஒருவரையும் ஆசைப்பட்ட ஏற்றமன்றோ அவளது? உம்மையும் அவளையும்சேர ஆசைப்பட்ட ஏற்றமுடையவளல்லளோ இவள்? ஸாக்ஷால்லக்ஷ்மியோடொக்கச் சொல்லலாமாகாதே இவளை!

**என்திருமகள்சேர்மார்பனேஎன்னும்என்னுடையாவியே!என்னும்***
**நின்திருவெயிற்றாலிடந்துநீகொண்ட நிலமகள்கேள்வனே! என்னும்***
**அன்றுருவேழுந்தழுவிநீகொண்ட ஆய்மகளன்பனே! என்னும்***
**தென்திருவரங்கங்கோயில்கொண்டானே! தெளிகிலேன்முடிவிவள்**
**[தனக்கே. (9)**

ஓ.—ஒன்பதாம் பாட்டில், இப்பிராட்டிக்கு ஓடுகிற தசையைக்கண்டு, இவளுடைய து:க்கத்துக்கு ஒருமுடிவு காண்கிறிலேன் என்கிறாள். [என்திருமகள்சேர் மார்பனே என்னும்] - என்திருமகள் என்றது தான் எம்பெருமானை ஸ்நேஹிக்கைக்கு நிபந்தநம். [என்னுடை என்று தொடங்கி] - திருமகள்சேர் மார்பனுயக்கொண்டு எனக்கு தாரகனானவனே என்னும்; ஆதராதிசயத்தாலே உன்னுடைய திருவெயிற்றாலே நீ இடந்துகொண்ட நிலமகளுக்குவல்லபனானவனே என்னும்; நப்பின்னைப்பிராட்டி உன்னோடே ஸம்ச்லேஷிக்கவல்லளோ என்று துளும்புகிற தசையிலே ம்ருத்யுவைப்போலேயிருக்கிற ருஷபங்கள் ஏழையும்தழுவி நீ கைக்கொண்ட நப்பின்னைப்பிராட்டிக்கு ஸ்நேஹியானவனே! என்னும். இப்படி இவர்களை ஸ்நேஹித்துவைத்து, இவர்கள்அடியேனுமிருக்கிற என்திறத்தில் அங்கீகாரம் பண்ணாமைக்கு நிபந்தநமென்? என்று கருத்து. ப்ரணயிநிவிஷயத்தில் இப்படி அபிநிவிஷ்டனாயிருந்துவைத்து என்னை அங்கீகாரம் பண்ணாதிருப்பானேன்? என்றுமாம். [தென்என்று தொடங்கி] - எல்லாருடைய ஆர்த்திகளையும் தீர்த்து அருளுகைக்காகத் தெற்குத்திக்குக்கு ச்லாக்யமான கோயிலை ஸ்தாநமாகக்கொண்டவனே!

இ.—ஒன்பதாம்பாட்டில், இவளுடைய து:க்கத்துக்கு ஒருமுடிவுகாண்கிறிலேன் என்கிறாள். [என் திருமகள் சேர்மார்பனே என்னும்] - என் என்கிறஇடம் திருமகளிலே அந்வயிக்கிறது; மார்பனே என்கிற இடத்தில் அந்வயிக்கிறதன்று. எனக்கு ஸ்வாமிநியான பிராட்டியைத் திருமார்விலே யுடையவனே என்னாநின்றாள். இவ்வதிப்ராவண்யம் பிராட்டியடியாகவந்தது என்கை. [என்னுடையாவியே என்னும்] - இவளுடைய ப்ராணன் பஞ்சவ்ருத்தியாயன்று இருப்பது; ஒருமிதுநமாயிற்று இவளுக்கு ப்ராணன்! திருமகள் சேர்மார்பனுக்கொண்டு எனக்கு தாரகனானவனே என்னும். [நின்திருவெயிற்றால்] - அழகுக்கு நின்திருவெயிறு என்னுமித்தனை. [இடந்து நீகொண்ட] - நீ இடந்துகொண்ட; அந்த:புர கார்யத்துக்கு ஆளிடவொண்ணாதே. ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு வல்லபனானவனே! என்னும். [அன்று] - "உன்னோடே ஸம்ச்லேஷிக்கவல்லேனே" என்று துளும்புகிறவன்று. [உருவேழுந்தழுவி] - ம்ருத்யுஸத்ரு சமான ருஷபங்கள் ஏழையும் தழுவி. உருவென்று - உருமு. இடிபோலே பயங்கரமான ஏறு "அந்தரமேழுமதிருமிடிகுரல்" என்னக்கடவதிறே. அவளை லபிக்கைக்கு நிமித்தமாகையாலே, அவள் முலையிலே அணைந்தாப்போலே இருக்கை. நப்பின்னைப்பிராட்டிக்கு ஸங்கித்தனானவனே! என்னும். [நீகொண்ட] - நீகைக்கொண்ட: இத்தால் - என் ஸ்வாமிநிகளுக்கு உதவின நீ, அவர்கள் அடியேனை எனக்கு உதவாதொழிவதே என்னுதல்; ப்ரணயியான நீ என்னை அங்கீகரியாதொழிவானென்? என்னுதல். [தென்திருவரங்கம் இத்யாதி] - இவளை விரஹப்ரளயங்கொள்ளாமைக்கும் இடைச்சுவர்போகைக்கு மன்றோ கோயிலிலே சாய்ந்தது? [தென்திருவரங்கம்] - தெற்குத்திக்குக்கன்றோ கோயிலிலே வந்து சாய்ந்தருளிற்று? [தென்திருவரங்கம்] - தெற்குத்திக்குக்கு ச்லாக்யமான கோயில். [இவள்தனக்கு - முடிவு - தெளிகிலேன்] - அவர்கள்எல்லார்படியையு முடைய இவள் உம்மைப்பெற்றாளாம் விரகு அறிகிறிலேன்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. இவளுடைய து:க்கத்துக்கு ஒருமுடிவு காண்கிறிலேனென்கிறாள்.

[என்திருமகள் சேர்மார்பனே யென்னும்] என் பேற்றுக்குப் புருஷகாரமில்லாமல் இழக்கிறேனோ? என்னும். விசிஷ்டத்திலன்று என் என்கிற இது; விசேஷணாம்சத்திலே [அதாவது - என் என்கிறவிடம் திருமகளிலே யந்வயிக்கிறது: மார்பனே என்கிறவிடத்தில் அந்வயிக்கிறதன்று.] அனந்தாழ்வான் தன் பெண்பிள்ளையை 'என்திருமகள்' என்று திருநாமஞ் சாத்தினான்; பட்டர் பெருமாளுக்கு "அடியேனை ஸ்த்ரீதனமாகப் பிராட்டிக்கு வந்தவன்' என்று திருவுள்ளம்பற்றவும்; நானும் 'இவர் எங்கள் நாய்ச்சியார்க்கு நல்வர் என்று அவ்வழியே 'அழகிய மணவாளப்பெருமாள்' என்று நினைத்திருக்கவுமாகவேணும்" என்று வேண்டிக்கொண்டார். [சேர்மார்பனே] ரஹஸ்யத்தில் நித்யயோகத்தைச் சொல்லுகிறது. அவள் ஒருக்ஷணம் பிரியவிருக்கிலன்றோ எனக்குப் பேறுதாழ்க்கவேண்டுவது! பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்யுமவை கேட்கைக்காக நஞ்சீயரை யழைத்தருளித் தாம் அமுதுசெய்யா நிற்கச்செய்தே இத்திருவாய்மொழி இயலைக் கேட்டருளாநிற்க, இப்பாட்டளவிலே வந்தவாறே 'என் திருமகள் சேர்மார்பனே யென்னுமென்னுடையாவியே என்னும்" என்று இயலைச் சேர்த்தருளிச்செய்ய, அத்தைக் கேட்டுக் கையையுதறி, 'ஸ்ரீரங்கநாத' என்று அணையிலே சாய்ந்தருளினார் பட்டர்" என்று அருளிச்செய்வர். "அப்போது திருமேனியிலே பிறந்த விக்ருதியைக்கண்டு இவர்க்கு பகவத்ப்ராப்தி யணித்தாகிறதோ? என்று அஞ்சியிருந்தேன்" என்று ஜீயர் அருளிச்செய்வர். [என்னுடையாவியே யென்னும்] இவர்க்கு ப்ராணன் ஒரு வாயுவிசேஷமல்ல: ஒருமிதுநமாயிற்று. திருமகள் சேர்மார்பனுக்கொண்டு எனக்கு தாரகனானவனே! என்னும். (நின் இத்யாதி) ப்ரணயிநிகளுக்குக் காரியஞ் செய்யும்போது உன்னை யழியமாறியன்றோ கார்யஞ்செய்வது? ஸ்ரீபூமிப்பிராட்டிபக்கல் முகம்பெறலாவது அவள் விரூதிபைத் தன்முகே நோக்குவதே? "நின்திருவெயிறு" என்னுமித்தனை யழகுக்கு. [இடந்து நீகொண்ட] - நீ இடந்து கொண்ட. ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு வல்லபனானவனே! [அன்று இத்யாதி] ஒருநாள் உதவின நீ, இன்று உதவினலாகாதோ? நப்பின்னைப் பிராட்டியுடைய தசையை - அன்றென்னுமித்தனை. ஒன்றிரண்டன்றிக்கே யிருக்கிற ருஷபங்களேழையும் தழுவி. அவள்திருமுலைத்தடத்தை யணைத்தாப்போலே யிருக்கிறதாயிற்று. அவளைப்பெறு

கைக்கு உபாயமாகையாலே உருமென்று - இடி). இடிபோலே பயங்கரமான குரலையுடைய ஏறென்னுதல். உருவென்று - மிடுக்காய், மிடுக்குத்தான் வடிவுகொண்டாற்போலே என்னுதல். "உருவுட்கு" என்று உரிச்சொல்லு. நீ கொண்ட - நீகைக்கொண்ட. (ஆய்மகளன்பனேயென்னும்) என்னைக் கைவிட்டு என் ஸ்வாமிநிகள் பக்கலில் எங்ஙனே முகம்பெற இருக்கிறாய்? என்னும். தென்திருவரங்கம் கோயில்கொண்டானே) தெற்குத் திக்குக்கு ச்லாக்யமான ஸ்ரீரங்கக்ஷேத்ரத்தை வாஸஸ்த்தாநமாக வுடையவனே! "எருதேழடர்த்த அவதாரத்திலே முகங்காட்டப் பெற்றதில்லை" என்னும் குறையுண்டோ? அவதாரங்கள் போலன்றியே நித்யவாஸம் பண்ணுகிறது, பிற்பாடர்க்கு உதவன்றோ? (கதஸ்ஸ்வம் ஸ்த்தாநமுத்தமம்) என்னவேண்டாதபடி கோயில்கொண்டாயிற்று. (தெளிகிலேன்) அங்குக் குறையற்றபின்பு 'தப்பாது' என்று தெளியவிறேயடுப்பது, அது மாட்டுகிறிலேன். *மாசுச:* என்றத்தை யநுஷ்ட்டாநபர்யந்தமாக்கிக்கொண்டு நீ கிடந்தால், ஸ்த்திதோ஽ஸ்மி கதஸந்தேஹ:* என்றிருக்கவிறேயடுப்பது? அதுமாட்டுகிறிலேன். இவள் தனக்கு - முடிவு - தெளிகிறிலேன். இவளவஸ்த்தை இதுவாயிருக்க, ஒரு ஜ்ஞாநலாபத்தாலே யாறியிருக்கப் போமோ?

**முடிவிவள்தனக்கொன்றறிகிலேனென்னும் மூவுலகாளியே! என்னும்***
**கடிகமழ்கொன்றைச்சடையனே! என்னும் நான்முகக்கடவுளேயென்னும்***
**வடிவுடைவானோர்தலைவனே! என்னும் வண்திருவரங்கனே! என்னும்***
**அடியடையாதாள்போலிவளணுகியடைந்தனள் முகில்வண்ணனடியே. (10)**

ஒ.—பத்தாம்பாட்டில், பெரியபெருமாளை ஸம்ச்லேஷிக்கப் பெறுளோ என்று தோற்றும்படி அவஸந்நையான இப்பெண்பிள்ளை அவர்திருவடிகளை அணுகி ஸம்ச்லேஷிக்கப்பெற்றாள் என்கிறாள். [முடிவிவள் தனக்கொன்று அறிகிலேன் என்னும்] - இப்பெண்பிள்ளை தனக்கு ஒருமுடிவு காண்கிறிலேன் என்றுநின்றாள். [மூவுலகென்று தொடங்கி] - மூன்று லோகத்தையும் ஆளக்கடவ இந்த்ரனுக்கு அணுக்கனாக ஆத்மாவாய் நின்றவனே! என்னும். தன்னுடைய ஐச்வர்யத்துக்கேற்ற தாரையுடையனும் ஸாதகனென்று தோற்றும்படியானஜடையையுமுடையனான ருத்ரனுக்கு ஆத்மதயாநின்று அவனுக்கு நிர்வாஹகனானவனே! என்னும். சதுர்முகனான தைவத்துக்கு அந்தராத்மதயாநின்று நிர்வாஹகனானவனே! என்னும். உன்னோடு ஒத்தவடிவையுடைய அயர்வறுமமரர்களுக்குத் தலைவனானவனே! என்னும். அந்யபரரோடு அநந்யபரரோடு வாசியின்றிக்கே எல்லார்க்கும் நிர்வாஹகனான நீ, உன்னாலல்லது செல்லாதிருக்கிற என்னை ரக்ஷியாதொழிவதே! என்று கருத்து. [வண்திருவரங்கனே என்னும்] - கீழ்ச்சொன்னவை போலன்றிக்கே மிகவும் ஒளதார்யத்தை உடையையாய்க்கொண்டு கோயிலிலே ஸு௨லபனானவனே! என்னும்.

இ.—பத்தாம்பாட்டில், இனிக்கிட்டமாட்டாளோ? என்னும்படி அவஸந்நையான இவள், பெரியபெருமாள்திருவடிகளிலே ஸம்ச்லேஷிக்கப்பெற்றாள் என்கிறாள். [முடிவுஇவள் தனக்குஒன்றறிகிலேன் என்னும்] - இவள், தனக்கு ஒருமுடிவு காண்கிறிலேன் என்னாநின்றாள். [மூவுலகாளி இத்யாதி] - த்ரைலோக்ய நிர்வாஹகனான இந்த்ரனுக்கு ஆத்மாவாய்நின்று அவனுடைய அதிகாரத்தை நடத்தினவனே! என்னும். ஐச்வர்யஸூசகமான தாரையும், ஸாதகத்வஸூசகமான ஜடையையும் உடைய ருத்ரன் அதிகாரத்தை அவனுக்கு ஆத்மாவாய்நின்று நிர்வஹித்தவனே! என்னும். கடிகமழ் - பரிமளம்மிகுகை. சதுர்முகனான தேவதைக்கு ஆத்மாவானவனே! என்னும். உன்னோடொத்த வடிவையுடைய நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனானவனே! என்னும். அந்யபரரான ஈச்வராபிமாநிகளோடு, அநந்யபரராய் [illegible]ரோடு வாசியற எல்லார்காரியமுஞ்செய்கிற நீ, உன்னாலல்லது செல்லாத எனக்கு உதவா [illegible]? என்கை. [வண்திருவரங்கனே என்னும்] - "ஏஷ ஸர்வஸ்வபூதஸ்து" என்று என்னை [illegible] அணைக்கைக்குக் கோயிலிலேவந்து ஸந்நிஹிதனானவனே! என்னும். [அடி இத்யாதி] - "[illegible]ப்போலேயிருந்து முடிந்துகொடு நின்றாள்" என்று பூர்வர்கள் நிர்வாஹம்; "அங்ஙனே யானும் மேல்ப்ரபந்தம் நடவாதென்று, ஸம்ச்லேஷிக்கப்பெறுளோ என்று தோற்றும்படி அவஸந்நையான இவள் கிட்டி ஸம்ச்லேஷிக்கப்பெற்றாள் காளமேகநிபச்யாமமான பெரியபெருமாள் திருவடிகளை" என்று எம்பெருமானார் நிர்வஹித்தருளினர்.

**ஈடு.**—பத்தாம்பாட்டு. இனிக்கிட்டமாட்டாளோ என்னும்படி அவஸ்தையான இவள் பெரியபெருமான் திருவடிகளை ஸம்ச்லேஷிக்கப் பெற்றாளென்கிறான்.

[முடிவு இவள் தனக்கு ஒன்று அறிகிலேன் என்னும்] பெண்பிள்ளைவார்த்தையைத் திருத்தாயார் அநுபாஷிக்கையாலே, "இவள் தனக்கு முடிவு ஒன்றறிகிலேன்" என்று நின்றாளென்கிறான். இத்து:க்கஸாகரத்தைக் கரைகாணும் விரகு அறிகிலேனென்னுதல், முடிந்து பிழைக்கும் விரகு அறிகிலேனென்னுதல். [மூவுலகு இத்யாதி] "மூவுலகாளியே! கடிகமழ் கொன்றைச்சடையனே! நான்முகக்கடவுளே! என்னும் வடிவுடைவானோர்க்குத் தலைவனே! என்னும்" என்று திருமாலையாண்டான் வைபரீத்யமாக நிர்வஹிக்கும். என்னும்-என்னுமது என்னுமவளாய். எம்பெருமானார் கேட்டருளி ஸாமாநாதிகரண்யத்தாலே அருளிச்செய்தருளினார். த்ரைலோக்யத்துக்கும் கடவனான இந்த்ரனுக்கு அந்தர்யாமியாய் நின்று அவனுடைய அதிகாரத்தை நிர்வஹிக்கிறவனே! என்னும். பரிமளத்தையுடைத்தான கொன்றையை ஜடையிலே யுடையருத்ரனுக்கு அந்தர்யாமியாய் நின்று அவனுடைய பதத்தை நிர்வஹிக்கிறவனே! என்னும். அவர்களோடு இவ்வருகுள்ளாரோடு வாசியற எல்லார்க்கும் நிர்வாஹகனாயிருக்கிற சதுர்முகனாகிற தேவதைக்கு அந்தர்யாமியானவனே! என்னும். [வடிவுடை இத்யாதி] பகவதநுபவத்தால் வந்தஹர்ஷம் வடிவிலேதோற்றும்படியிருக்கிற நித்யஸூரிகளுக்கு நாதனானவனே! என்னும். வடிவுடை வானோர்தலைவனே என்றத்தோடு, மூவுலகாளியே என்றத்தோடு, கடிகமழ் கொன்றைச்சடையனே என்றத்தோடு, நான்முகக் கடவுளே என்றத்தோடு வாசியற்றிருக்கிறதாயிற்று இவர்க்கு, மயர்வறமதிநலம் பெறுகையாலே; விசேஷஜ்ஞத்தில் பர்யவஸிக்குமவரல்லரே; ஸர்வநிர்வாஹகனென்று உணர்ந்திருக்குமவராயிற்று இவர். [வண்திருவரங்கனேயென்னும்] நித்யஸூரிகளே அநுபவித்துப்போகையன்றிக்கே, நித்யஸம்ஸாரிகளும் இழவாமைக்கன்றோ இங்கு வந்து கண்வளர்ந்தருளுகிறது. இங்குச் சாய்ந்தருளின தின்ப்பலம் நான் பெறவேண்டாவோ? என்னும். ஆசைப்பட்டார்க்குத் தன்னைக் கொடுக்கும் ஔதார்யம். [அடியடையாதாளித்யாதி] "ஜீவிப்பாரைப்போலேயிருந்து, கடுகமுடிந்துகொடுநின்றாள்" என்று நிர்வஹிப்பாருமுண்டு. "அப்போது மேல்ப்ரபந்தம் நடவாது, ஆகையாலே திருவடிகளைக் கிட்டாதாரைப் போலேயிருந்து க்ரமத்திலே கிட்டிக்கொண்டு நின்றாள்" என்று அருளிச்செய்யும்படி. இதுதான் மாநஸாநுபவத்திலே ஒரு வைசத்யத்தைச்சொன்னபடி. [அடியடையாதாள் போல்] இவள் இப்போதே திருவடிகளைச்சேரமாட்டாள். இன்னம் சிறிது காலமிருக்கும் என்று போலேயிருந்தது; முடிந்து கொடுநின்றாளென்னுதல். இனி, ஸம்ச்லேஷிக்கப் பெறாளோ?' என்று தோற்றும்படி அவஸ்தையான இவள், கிட்டி ஸம்ச்லேஷிக்கப் பெற்றாள் காளமேக நிபச்யாமமான பெரியபெருமாள் திருவடிகளையே என்னுதல்.

**முகில்வண்ணனடியையடைந்தருள்சூடி உய்ந்தவன் மொய்புனல்பொருநல்***
**துகில்வண்ணத்தூநீர்ச்சேர்ப்பன் வண்பொழில்சூழ்வண்குருகூர்ச்**
**சடகோபன்***
**முகில்வண்ணனடிமேற்சொன்னசொல்மாலை யாயிரத்திப்பத்தும்வல்லார்***
**முகில்வண்ணவானத்துஇமையவர்சூழவிருப்பர் பேரின்பவெள்ளத்தே. (11)**

ஓ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி அப்யஸித்தார், ஆழ்வார்பட்ட க்லேசம்படாதே திருநாட்டிலே நிரதிசயாநந்தயுக்தராய்க்கொண்டு அயர்வறுமமரர்கள்சூழ இருப்பர் என்கிறார். [முகில் வண்ணன் என்று தொடங்கி] - பெரியபெருமாள்திருவடிகளிலே சேர்ந்து அங்குத்தை ப்ரஸாதத்தைப் பெற்று தரித்தவன்; மிக்க புனலையுடைய திருப்பொருநலில் துகில்வண்ணமான தூநீரிலே சேரக்

கடவான். [வண்பொழில்சூழ்வண்குருகூர் சடகோபன்] - அழகிய பொழில்சூழ்ந்திருந்துள்ள வண் குருகூர் சடகோபன். [முகில்வண்ணன் என்று தொடங்கி] - பெரியபெருமாள்திருவடிகளிலே சொன்ன ஆயிரந் திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழிவல்லார் எம்பெருமானுடைய திருநிறத் தாலே முகில்வண்ணமான திருநாட்டில்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லார் இவர்பட்ட க்லேசம்படாதே திரு நாட்டிலே நிரதிசயாநந்தயுக்தரான நித்யஸூரிகள் சூழ இருக்கப்பெறுவர்கள் என்கிறார். [முகில் வண்ணன் இத்யாதி] - பெரியபெருமாள்திருவடிகளைக் கிட்டி அங்குத்தை ப்ரஸாதத்தைப் பெற்று தரித்தவன். பூர்வாவஸ்த்தையில் ஸத்தையும், மேலுள்ளவையும் அவனருளாலேயாயிருக்கையாலே 'உய்ந்தவன்' என்கிறது. வலியையுடைய புனலையுடைத்தான பொருநலில் துகிலினுடைய வர்ணமான சுத்தஜலத்திலே சேர்க்கப்பட்டவர். மொய் - வலி. ஆற்றுப்பெருக்காலே வலிபெற்றேடுகை. "அகர்த்தம மிதம் தீர்த்தம் பரத்வாஜ நிசாமய, ரமணீயம் ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோ யதா" என்று தம்முடைய திருவுள்ளம்போலே ப்ரஸந்நமான ஜலத்தோடே ஸங்கதராவர். [தூநீர்ச்சேர்ப்பன்] - தூநீர்த்துறைவன். தர்சநீயமான பொழிலையுடைத்தாய் உதாரமான திருநகரி. "பெரியபெருமாள்திருவடிகளிலேயாயிற்று ஆயிரமும் சொல்லிற்று. 'திருமோகூர்க்கீத்தபத்து' என்றும், 'திருவேங்கடத்துக்கிவைபத்து' என்றும் பிரித்துக் கொடுத்த இத்தனை; திருப்பலகையில் அமுதுபடியிலே திருப்பதிகளில் நாயன்மார்க்கு அளந்து கொடுக்குமாபோலே" என்று பிள்ளை அருளிச்செய்வர். [முகில்வண்ண வானத்து] - முகில்வண்ண னுடைய வானம் என்னுதல். அவனுடையநிழலீடான வானம் என்னுதல். [இமையவர் சூழவிருப்பர் பேரின்பவெள்ளத்தே] - தாம் மோஹித்துத் திருத்தாயார் தனியே கூப்பிடஇருந்த இவருடையக்லேச மின்றிக்கே, நித்யஸூரிகள்நடுவே ஆநந்தநிர்ப்பரராய் இருக்கப்பெறுவர்கள்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழி யப்யஸிக்கவல்லார், இவர்பட்டக்லேசம்படாதே திருநாட்டிலே நிரதிசயாநந்த யுக்தராய், நித்யஸூரிகள்சூழ இருக்கப்பெறுவர் என்கிறார்.

[முகில்வண்ணன் இத்யாதி] பெரியபெருமாள்திருவடிகளைக் கிட்டி அங்குத்தைப்ரஸா தத்தைப்பெற்று தரித்தவன். பூர்வாவஸ்த்தையில், ஸத்தையும் அழியும்படியாயிருக்கையாலே உய்ந்தவனென்கிறது. மொய்யென்று மிகுதிக்கும், வலிக்கும்பேர். இப்போது நீரோட்டத்தால் வந்த வலியை நினைக்கிறது. வலியையுடைத்தான ஜலத்தோடே கூடின பொருநலில் துகிலி னுடைய வண்ணத்தையுடைத்தான தூநீர்த்துறைவன். சேர்ப்பன் - துறைவன். நெய்தல் நிலத்தில் தலைமகன். மொய்புனலென்னுமிற்கு, தூநீரென்றது-பெருவெள்ளமாயிருக்கச்செய்தே தெளிந்திருக்கும்படியைப் பற்ற. *ரமணீயம் ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோ யதா* என்கிறபடியே. தர்சநீயமான பொழிலையுடைத்தாய் உதாரமான திருநகரிக்குநாதன். [முகில் இத்யாதி] காள மேகம்போலே நிரதிசய ஸௌந்தர்ய யுக்தரான பெரிய பெருமாள் விஷயமாக அருளிச்செய்த சப்தாத்மகமான மாலைகளாயிரத்து இப்பத்தையும் பாவவ்ருத்தியோடே அப்யஸிக்கவல்லவர் கள். "பெரிய பெருமாள் திருவடிகளிலே திருவாய்மொழியாயிரமுஞ்சொல்லிற்று. திருமோகூர்க்கு ஈத்தபத்து," "திருவேங்கடத்துக்கிவைபத்து" என்று பிரித்துக்கொடுத்தவித்தனை; பெருமாள் திருப்பலகையில் அமுதுபடியிலே மற்றைத்திருப்பதிகள்நாயன்மார்க்கும் அளந்து கொடுக்கு மாப்போலே" என்று பிள்ளையருளிச்செய்வர். [முகில்வண்ணவானத்து] அங்கிருக்கிறவனுடைய நிழலீட்டாலே அவன்படியாயிருக்கிறவானம் என்னுதல்; முகில்வண்ணனுடைய வானமென் னுதல். [இமையவர் இத்யாதி] இவள் மோஹித்துக்கிடக்கத் திருத்தாயார் தனியேயிருந்து கூப்பிட்ட எளிவரவுதீர, நித்யஸூரிகள் திரளவிருக்க அவர்கள் நடுவே ஆநந்தநிர்ப்பரராயிருந்து அநுபவிக்கப் பெறுவர்கள்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## மூன்றும் திருவாய்மொழி - வெள்ளைச்சுரிசங்கு : ப்ரவேசம்

ஒ.—மூன்றுந்திருவாய்மொழியில், இப்படி அவஸந்நையானபிராட்டி, பெரிய பெருமாளுடைய அசரண்யசரண்யதை தொடக்கமான கல்யாணகுணகணஸௌந்தர்யாதிகளைத் தாம் வாய்வெருவியும், அத்தைத்திருத்தாயார் அநுபாஷித்தும், ஆகஇப்படி ப்ராஸங்கிகமாக ப்ரவ்ருத்தமான திருநாமத்வநி செவிவழியேபுக, அநுசிசிரோபசாரமாகதரித்து, ஸர்வைச்வர்யஸம்பூர்ணனும்க்கொண்டு தன்னுடைய விடாய்க்கிடாம்படி அணித்தாகத் தென்திருப்பேரெயிலிலேவந்து வீற்றிருந்தருளின மகரநெடுங்குழைக் காதனுடைய ஸ்மிதவீக்ஷிதாதிகளிலே அபஹ்ருதசித்தையாகையாலே அவனையொழிய தரிக்கமாட்டாதே பதற, இவளை "நீ என்பட்டாய்!" என்று தாய்மாரும் தோழிமாரும் மற்றுமுள்ள உறவுமுறையார்களும் வினவ, அவர்களைக்குறித்து "நான் மகரநெடுங்குழைக் காதனிலே அபஹ்ருதசித்தையானேன், அவன் எழுந்தருளிஇருந்தருளின திருப்பேரெயிலிலே புக்கல்லது தரிக்கமாட்டேன்; என்னை அங்கேகொண்டு போய் விடுங்கோள்" என்ன, அவர்கள் "இது நம்முடைய ஸ்த்ரீத்வாதிகளுக்கு சேரன்று" என்று நிஷேதிப்பாரும் பொடிவாருமாக, நீங்கள் கொடுபோய் விட்டிலீகோளாகில் நான்போய்ப்புகத்தவிரேன் என்கிறாள். "விச்லேஷம் அவ்யுத்பந்நம் என்னும்படி ஸம்ச்லேஷம் பிறந்து 'ஸர்வகாமஸம்ருத்திநி யாய்க்கொண்டு இப்படி அநேககாலம்சென்று இனிவிச்லேஷியா விடில் பொறுக்கவொண்ணாத தசையிலே, ம்ருகயாதிவ்யாஜத்தாலேயாகிலும் விச்லேஷிக்கவேணும்' என்று பார்த்து 'போய் வருகிறோம்' என்ன, தன்மௌக்த்யத்தாலே 'ஸம்ச்லேஷத்திலே ஒரு ப்ரகாரமிறே விச்லேஷம்' என்று பார்த்து 'போகலாகாதோ' என்ன, அவனும் விச்லேஷிக்க, அநந்தரத்திலே இப்பிராட்டியும் பொறுக்கமாட்டாதே மிகவும் அவஸந்நையாய், 'பேரெயில் சூழ்கடல் தென்னிலங்கை செற்றபிரான் தென் திருப்பேரையிலே வந்து வீற்றிருந்தருளினான்: நான் அங்கேபோவேன்' என்ன, தாய்மாரும் தோழிமாரும் 'அவன் தானே வரக் காணவேணும்' என்று நிஷேதிக்க, அது கேளாதே நானேபோனேனாகாமே நீங்களே என்னைத் தென் திருப்பேரெயிலிலேகொண்டு போய் விடுங்கோள்! என்கிறாள்" என்றும் சொல்லுவர்.

இ.—மூன்றுந்திருவாய்மொழியில், பெரியபெருமாளுடைய அசரண்ய சரண்யத்வாதி கல்யாண குணங்களையும் ஸௌந்தர்யாதிவிக்ரஹகுணங்களையும் தான் வாய்வெருவியும், அத்தைத் திருத்தாயார் அநுபாஷித்தும் இப்படிப்ராஸங்கிகமாக ப்ரவ்ருத்தமான திருநாமத்தைக் கேட்டு இதுவே சிசிரோபசாரமாக மோஹம் தெளிந்து அநந்தரம் ஸம்ச்லேஷாபேக்ஷை பிறந்து பெருமையாலே அவஸந்நையாய், தன்விடாய்க் கீடாம்படி அணித்தாகத் தென்திருப்பேரெயிலிலேவந்து ஸர்வைச்வர்யத்தோடே வீற்றிருந்தருளின மகர நெடுங்குழைக்காதனுடைய ஸ்மிதவீக்ஷணாதிகளிலே அபஹ்ருதசித்தையாய் அவனையொழிய தரிக்க மாட்டாதேபதற, தோழிமாரும்தாய்மாரும் பந்துக்களும் இவள்தசையைககண்டு "உனக்குஓடுகிறதென்?" என்றுவினவ, "என்னெஞ்சு மகரநெடுங்குழைக்காதன்பக்கலிலே அபஹ்ருதமாயிற்று; நானும் அங்கே போய்ப்புக்கல்லது தரியேன்" என்ன, அவர்களும் "இது உன்வம்சத்துக்கும் உன்ஸ்த்ரீத்வத்துக்கும் போராது" என்ன; "வம்சத்தை நோக்கப்பார்த்திகோளாகில் நீங்களே கொடுபோய் விடுங்கோள், இல்லை யாகில் நான்போகத்தவிரேன்" என்று தனக்குப்பிறந்த துணிவைச் சொல்லுகிறாள். அதவா, கீழ் பட்ட க்லேசம் அவ்யுத்பந்நம் என்னும்படி பெரிய பெருமாளோடே ஸம்ச்லேஷம் உந்மஸ்தகரஸமாம்படி வ்ருத்த மாய், விச்லேஷியாவிடில் தர்மி அழியுமளவானவாறே, "ம்ருகயாதி வ்யாஜத்தாலே விச்லேஷிப்போம்" என்று பார்த்துப் பிரிவை ப்ரஸங்கிக்க, பிரிவுபுதியதுண்ணாத தன்மௌக்த்யத்தாலே "இதுவும் கலவியிலே ஒருவகையோ?" என்று அநுமதிபண்ணித் திருவனுக்கன் திருவாசலளவும் ஒருப்படுத்திவிட்டு அநந் தரம், விரஹத்தைப் பொறுக்கமாட்டாமையாலே நடுக்கடலிலே புக்காரைப்போலே நோவுபடுகிறதசையிலே, தாய்மாரும் தோழிமாரும் பந்துக்களும் "உனக்குஓடுகிறதென்?" என்ன, "நாயகன் ம்ருகயாதிவ்யாஜத் தாலே தென்திருப்பேரெயிலிலே இருந்தான்; நானும் அங்கே புக்கல்லதுதரியேன்" என்ன, "அவன்தானே வரக்காணுமதொழியப் பதறுகை இவ்வம்சத்துக்குப்போராதுகாண்," என்ன: "ஆகில், நீங்கள் கொடுபோய் விடப் பாருங்கோள்; இல்லையாகில் நானே போகை தவிரேன்" என்று தனக்குப்பிறந்த துணிவைச் சொல்லுகிறாள் என்றுமாம். குணஜ்ஞாநத்தாலேதரித்த நான் அவன்இருந்த ஊரிலேபோய்ப்புகவேணும் என்கிறாளாதல், ஸம்ச்லேஷம் வ்ருத்தமாய்ப் பின்பு பிரிவுவிளைந்து அவன் இருந்த தேசத்திலேபோய்ப்

புக்கல்லது தரியேன் என்கிறாளாதல். ''ஆராமஞ்சூழ்ந்த அரங்கம்'' என்று திருப்பதிகள் பெருமாளுக்குப் பகலிருக்கையாகையாலே, ''தென்திருப்பேரையிலே போனான்'' என்று அங்கேபோகத் தேடுகிறாள். இதில் சொல்லிற்றாய்விட்டது - விஷயப்ராவண்யத்தை சாஸ்த்ரத்தால் மீட்கவொண்ணாதாப்போலே, பகவத் விஷயத்திலே ப்ரவணராவாரை தேசிகராலும் மீட்கவொண்ணாத அதிப்ராவண்யத்தைச் சொல்லுகிறது.

ஈடு.—கீழ், 'இட்டகாலிட்டகை' என்கிறபடியே இவள் மோஹித்துக்கிடக்க, இவளுக்கு முன்னே தோழிமாரும் கரைப்பட, திருத்தாயாரோருத்தியும் இவள்தசையை அநுஸந்தித்து அருகேயிருந்து கூப்பிட்டுப் போருமது தவிர்ந்து, இப்பெண்பிள்ளை தானே யெழுந்திருந்து கால்நடை தந்துபோமளவாய் விழுந்தது. அதுக்கடி: ''பற்றிலார்பற்ற நின்றானே'' என்று பெரியபெருமாளுடைய அசரண்ய சரண்யத்வம் தொடக்கமான இவளுக்குப் பற்றாசான குணங்களையும் ஸௌந்தர்யாதி விக்ரஹ குணங்களையும் இவள் தான் வாய்வெருவியும் திருத்தாயார் சொல்லவும் கேட்டு அத்தாலே தரித்தாள். போனவுயிரை மீட்கவற்றாயிறே குணஸ்வபாவமிருப்பது. கீழ்ப்பிறந்த மோஹமும் தெளிந்து, விச்லேஷ வ்யஸநமும் அநுஸந்திக்க வல்லளாய், பின்பு, ''அவனைக்கிட்டியல்லது நில்லேன்'' என்னும் ஆற்றாமையும் பிறந்து, அது பெருமையாலே அவஸக்தையாக, இவள் விடாய்க்கிடாம்படி அணித்தாகத் தென்திருப்பேரெயிலே வீற்றிருந்த மகரநெடுங்குழைக்காதனுடைய அபேக்ஷிதாதிகளிலே அபஹ்ருதசித்தையாய், அவனிருந்தவிடத்தேறப் போகவேணும் என்று ஒருப்பட, பழையபடியே தோழிமாரும் தாய்மாரும் அவளைச்சூழப்போந்து ''உனக்கு இத்தனை அதிமாத்ரப்ராவண்யமாகாது; நமக்கு இது பழியாய்விளையும்'' என்ன, ''நீங்கள் சொல்லுகிறவற்றால் ப்ரபோதநமுண்டாகமாட்டாது, நான் அவன்பக்கலிலே அபஹ்ருத சித்தையானேன்; ஆனபின்பு, நானே போனேனாகாமே நீங்கள் என்னோடுடன்பட்டு அங்கே கொடுபோய்ச் சேர்க்கப்பாருங்கோள்'' என்று தனக்குப் பிறந்த துணிவை அவர்களுக்கு அறிவித்துச் சொல்லுமதாயிருக்கிறது.

அங்ஙனன்றிக்கே, பிள்ளான் பணிக்கும்படி; '(''முகில்வண்ணனடியை இவளணுகியடைந்தனள்'' என்றதாகையாலே) *ஸமா த்வாதச தத்ராஹம்* என்கிறபடியே பெரியபெருமாளோடே சிரகாலம் உக்மஸ்தகரஸமான ஸம்ச்லேஷம் ப்ரவ்ருத்தமாய், பிரிந்து கூடாவிடில் இரண்டுதலைக்கும் அழிவுவருமளவாய்ச்சுதாய் - இனியெல்லாவளவிலும் ஒருநீராகக் கலக்கிறது தர்மியிரண்டும் கூடியிறே; ஆகையாலே, பிரியாவிடில் தர்மிலோப பர்யந்தமாகப் புக, இவ்வளவில், ஈரவகளுள இவள் இரண்டு தலையும் ஜீவிக்கப் பார்ப்பாரொருவனாகையாலே பிரிவை ப்ரஸங்கிக்க, இவளும் விச்லேஷத்தில் வாஸநையில்லாதாளொருத்தியாகையாலே 'கலவியிலே யொருவகைபோ' என்று கொண்டு இவளும் அநுமதிபண்ண, அவனும் அவ்வேட்டை நிமித்தமாகப் புறப்பட, இவளும் திருவாணுக்கன் திருவாசலளவும் ஒருப்படுத்திமீள -, எல்லாவளவிலும் பிரிவு தன் காரியம் செய்தன்றி நில்லாதிறே; அநந்தரம் இவள் நோவுபடப்புக, இத்தைக் கண்டதோழிமாரும் தாய்மாரும் 'உனக்கு ஓடுகிறதென்?' என்றுகேட்க, 'ஸ்ரீஜனகராஜன் திருமகள் காட்டிலே கூடப்போய் அவளிருந்தவிடம் நின்றவிடம் உலாவினவிடந்தோறும் கூடவிருந்து அநுபவித்தாப்போலே, நானும் அவனிருந்த விடத்தே போய்ப் புக்கல்லது நில்லேன்' என்ன, 'உனக்கு இது தலைமைக்குப் போராது நீ சொல்லுகிறவை வார்த்தையன்று' என்ன, அவர்களை 'நீங்கள் நிரோதிக்கிறத்தால் பெற்றதென்? நான்போகை தவிரேன்; நீங்களே என்னைக்கொடுபோய் விடுங்கோள்' என்ன, அவர்கள் 'அதுக்கு நாங்கள் வழிப்படோம்' என்ன, 'ஆகில்நானேயாகிலும்போகை தவிரேனென்கிறாள்' என்று. *ஸமா த்வாதச தத்ராஹம்* இப்போது காணுசித்த தர்சநமுங்கூட அரிதாம்படியிருக்கிறநான், முன்பு சிரகாலம் அவரோடேயநுபவிக்கப் பெற்றேனன்றோ! *ராகவஸ்ய நிவேசநே* எங்கள் மாமனாருடைய மாளிகையிலே; அவர் தண்ணீர்த்துரும்பறுத்துத் தர, நெடுங்காலம் அநுபவித்தேன். *புஞ்ஜாநா அமாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ* *ஸர்வாந் காமாந்* என்கிறபடியே எல்லாம் அநுபவிக்கப்பெற்றேன். அப்படியுமன்றிறே இங்கு: *பஹவோ ந்ருப கல்யாணகுணா:* என்று குணங்களிரட்டித்தவிடமிறே இது. ஆக இத்தால் சொல்லிற்றாயிற்று - நமக்கு சப்தாதிவிஷயங்களினின்றும்

இந்த்ரியங்களை மீட்கவொண்ணாதாப்போலேயிறே இவரை பகவத்விஷயத்தினின்றும் மீட்க வொண்ணாதபடி. அது கர்மமடியாக வருகிறது; இது பகவத்ப்ரஸாதமடியாக வருகிறது. திருத்தாயார் பேச்சாய்வருகிறவை, ஆழ்வார்தமக்குப் பிறந்த தசாவிசேஷம். தலைமகளாய்ப் பேசுகிறதும் இவர்க்குப் பிறந்தநேதார் அவஸ்தாவிசேஷம். அதில், நிஷேதிக்கிற திருத்தாயார் முகத்தால் சொல்லுகிறது, ஸ்வரூபமான ப்ராவண்யத்திலே உபாயம் சேரில் செய்வதென் என்னுமதுக்குச் சொல்லுகிறது; பெண்பிள்ளைகருத்தாற் சொல்லுகிறது - உபாயம் அவனே யாகில் ப்ராவண்யம் ஸ்வரூபமாமத்தனையன்றோ? என்று. ஆக, இவ்விரண்டர்த்தத்தையும் இரண்டு முகத்தாலே ஆழ்வார்தாம் அநுஸந்தித்தபடியைச் சொல்லுகிறது. மோஹமும் தெளிந்து தானே கூப்பிடவல்லளான இதுவே இத்திருவாய்மொழிக்கு ஏற்றம்.

**வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தித் தாமரைக்கண்ணனென்னெஞ்சினூடே*,**
**புள்ளைக்கடாகின்றவாற்றைக்காணீ ரென்சொல்லிச்சொல்லுகேன் அன்னை**
**மீர்காள்!***
**வெள்ளச்சுகமவன்வீற்றிருந்த வேதவொலியும்விழாவொலியும்***
**பிள்ளைக்குழாவிளையாட்டொலியுமறாத் திருப்பேரெயில்சேர்வனனே. (1)**

ஒ.—முதற்பாட்டில், இப்பிராட்டி வாசாமகோசரமாம்படி தனக்கு வர்த்திக்கிற வ்யஸநத்தாலே தென்திருப்பேரெயிலிலே போகவேணுமென்று தனக்குப் பிறந்த தசையைவினவுகிற தாய்மார்க்குச் சொல்லுகிறாள். [சுரிசங்கு] - சுரிந்திருக்கிற சங்கு. [ஊடே]-உள்ளே. கடாவுகை - நடத்துகை. [காணீர் - காண்கிறிலீர். [என்சொல்லிச்சொல்லுகேன் அன்னைமீர்!] - "உனக்கோடுகிற தசையை நாங்கள் அறிகிறிலோம், நீயேசொல்லிக்காண்" என்று தாய்மார் கேட்க, நான்படுகிற வ்யஸநஞ்சொல்லுகைக் குப் பாசுரங்காண்கிறிலேன் என்கிறாள். [வெள்ளச்சுகமென்று தொடங்கி] - நீங்களே என்னைக் கொடுபோய் விட்டிலீர்களாகில், தன்னை விச்லேஷித்தபின்பும் ஸம்ச்லேஷஜநிதப்ரீதி மாறாதே நிரதிசயஸுகத்தோடே அவன் வீற்றிருப்பதும்செய்து வேதத்வநியும் திருநாளில் வாத்யகோஷ கோலாஹலமும் "பாலா அபிக்ரீடமாநா:" என்னும் கணக்காலே அவனுடைய ஸௌந்தர்யாதிகளாலே ஜிதரான பிள்ளைக்குழாங்களுடைய விளையாடுகிறகோஷமும் நிரந்தரமாகச் செல்லுகிற தென்திருப் பேரெயிலிலே நான் போய்ப்புகுவன்.

இ.—முதற்பாட்டில், தனக்கோடுகிற வ்யஸநத்தாலே, "தென்திருப்பேரெயிலிலே போகவேணும்" என்று பிறந்த துணிவை வினவுகிற தாய்மார்க்குச் சொல்லுகிறாள். [வெள்ளைச்சுரிசங்கு இத்யாதி] - ச்யாமமானவடிவுக்குப் பரபாகமான வெண்மையையும் சுரியையுமுடைய ஸ்ரீபாஞ்சஜந்யம், மற்றைக் கைக்கு ஆபரணமான திருவாழி, இரண்டாழ்வார்களிலும் வந்துஅலையெறிகிறகண்கள். "சங்கு சக்கரங்களென்று கைகூப்பும் தாமரைக்கண்ணென்றேதளரும்" என்று கீழ் வாஸிதமானது ப்ரகாசிக்கிறபடி. "ஜிதந்தே" என்னப்பண்ணுகைக்குத் திருக்கண்களோடு திவ்யாயுதங்களோடு வாசி இல்லை. [என்னெஞ்சினூடே] - நாங்கள் காண்கிறிலோமே என்ன; உட்கண்விழியாத உங்களுக்குத் தெரியுமோ? [புள்ளைக்கடாகின்ற வாற்றை] - பெரியதிருவடியை நடத்துகிறபடியை. இவளுடைய தசையைக்கண்டு பெரியதிருவடி பிற்காலிக்கப்பிற்காலிக்க, வடிம்பாலே தாக்கிக்கொண்டுபோனபடி. கலவியாலும் பிரிவாலுமாக நெஞ்சின் ஊடு என்னும்படியாக ஆயிற்று, நெஞ்சு இடம்பெற்றபடி. பரமபதத்தில் அழகு சென்றேறுமாபோலே ஆயிற்று, நெஞ்சிலே அழகுசென்றேறுகிறபடி. [காணீர்] - தன் நெஞ்சில் ப்ரகாசம் பாஹ்யேந்த்ரியங் களுக்கும் விஷயமாம் என்றிருக்கிறாள். [காணீர்] - காண்கிறிலீர். கண்ட நீ சொல்லிக்காண் என்ன, [என்சொல்லிச் சொல்லுகேன்] - என்னுடைய அநுபவத்துக்கு என்னபாசுரத்தைச்சொல்லி நான் உங்க ளுக்குச் சொல்லுவது? இவ்வநுபவத்தில் வ்யுத்பத்தி இல்லாத உங்களுக்கு எத்தைச்சொல்லுவது? [அன்னை மீர்காள்] - இவ்வநுபவத்துக்கு தூரஸ்த்தைகளாய் ஹிதம்சொல்லிமீட்கிற உங்களுக்கு நான் சொல்லுவது என்? ஸமானது:க்கர்க்குச்சொல்லுவதை உங்களுக்குச் சொல்லவோ? ஒருஸம்பந்தம் அமையுமோ சொல்லு கைக்கு? எங்களுக்குச்சொல்லவொண்ணாதாகில் நீ செய்யப்பார்த்ததென்? என்ன; அவன் இருந்ததேசத்

